


# புண்ணியா
# PUNNIYA




S$2.70





















# ஒலி 96.8-ன்

# மாணவர் பாட்டுத்திறன் போட்டி



சிறப்பு விருந்தினர், திரு. சண்முகம், செம்பவாங் குழுத்தொகுதி நாடாளமன்ற உறுப்பினருடன் சிங்கப்பூர் வானொலி கழகத்தின் தலைமை நிர்வாக அதிகாரி, திரு. அந்தனி ச்சியா

ஒலி 96.8 நடத்திய மாணவர் பாட்டுத்திறன் போட்டியில் கலந்து கொண்ட, மாணவர்கள் போட்டி போட்டுக் கொண்டு பாடினார்கள் என்று தான் சொல்ல வேண்டும்!

பாடலை எல்லாரும் உணர்ந்து பாடினார்கள். ஆயினும் சிலரிடம் பாடலின் இடையே சிறு சிறு தடைகள்.

எனினும் மாணவர்களின் முயற்சிசயைப் பாராட்டத்தான் வேண்டும். வானொலி விழா 99-ன் தொடர்பில் சென்ற மாதம் ( *July*) 24-ந் தேதி இரவு 7.00 மணிக்கு *PUB Auditorium*-ல் மாணவர் பாட்டுததிறன் போட்டி 99" நடைபெற்றது. சிறப்பு விருந்தினராக, செம்பாவாங் குழுத் தொகுதி நாடாளுமன்ற உறுப்பினர்.

மாணவர் பாட்டுத்திறன் போட்டி 3 பிரிவுகளாக நடத்தப்பட்டது.

1. கீழ்நிலை உயர்நிலைப் பிரிவு *(Lower Secondary)*
2. மேல்நிலை உயர்நிலைப் பிரிவு *(Upper Secondary)*
3. உயர் கல்விப் பிரிவு *(Tertiary Institution)*

ஒவ்வொரு பிரிவிலும் 5 மாணவர்கள் கலந்து கொண்டார்கள்.

கீழ் உயர்நிலைப் பிரிவில், கலந்து கொண்டவர்கள் - அதீதி, திவாகரன், கௌதம், புனிதா, உமா.

மேல் உயர்நிலைப் பிரிவில் - லாவண்யா, மாலினி, பிரீதி, ராமதாஸ், சுமி.

உயர் கல்விப் பிரிவில் - கற்பகம், பிரியதர்ஷினி, சிவபாலன், சௌமியா, லாவண்யா.

மாணவர்கள் எல்லாம் போட்டி போட்டுக் கொண்டு பாடினார்கள். யாருக்கு முதல், இரண்டாம், மூன்றாம் பரிசு கொடுப்பது என்ற நடுவர்களுக்கே சிரமமாக இருந்திருக்கும்.

நிகழ்ச்சியின் இடையே இளமாறன், இஃபானுல்லா பாடினார்கள். அறிவிப் பாளர்கள் நகைச்சுவையாக பேசியது நிகழ்ச்சிக்கு மேலும் மெருகூட்டியது.

ஒவ்வொரு பிரிவிலும் ஐந்து பரிசுகள். கீழ் உயர்நிலைப் பிரிவில் உமாவுக்கு முதல் பரிசு. இவர் அன்பென்னும் மழையிலே என்னும் பாடலைப் பாடினார். உமா, சூச்சுயூன் உயர்நிலைப் பள்ளியில், உயர்நிலை ஒன்றில் படிக்கிறார். உயர்நிலை மேல்நிலைப் பிரிவில் இராமதாஸ் முதல் பரிசு பெற்றார். இவர் இயோ சூ காங் உயர்நிலைப் பள்ளியில் உயர்நிலை நான்கில் படிக்கிறார். இவர் துள்ளாத மனமும் துள்ளும் படத்தில் இடம்பெற்ற இருபது கோடி என்னும் பாடலைப் பாடினார்.

உயர்கல்விப் பிரிவில் பிரியதர்ஷினி முதலாவதாக வந்தார். இவர் யீஷுன் தொடக்கக் கல்லூரியில் முதலாமாண்டு படிக்கிறார்.

முதல் பரிசு பெற்ற மூவருக்கு 300 வெள்ளி பற்றுச்சீட்டு, சான்றிதழ், வெற்றிக் கோப்பை. ஒருவருக்கு, சென்னை சென்றுவர விமான டிக்கெட், சென்னையில் தங்கும் வசதி. பரிசு பெற்றவர்களுக்கு செம்பாவாங் குழுத் தொகுதி நாடாளுமன்ற உறுப்பினர், திரு. சண்முகம் பரிசுகளை வழங்கினார்.

கடந்த மூன்றாண்டுகளாக ஒலி 96.8 இந்த மாணவர் பாட்டுத்திறன் போட்டியை நடத்தி வருகிறது! இளையர்கள் கலைத்துறையில்

ஈடுபாடு கொள்ள, மாணவர் பாட்டுத் திறன் போட்டி ஒரு நல்ல முயற்சி, பாராட்டுக்கள்.

## வெற்றிக்குக் காரணம்



உமா, ''எனக்கு முதல் பரிசு கிடைத்ததில் ரொம்ப மகிழ்ச்சி. எனக்கு பாடுவதற்கு பிடிக்கும். நான் தொடக்கப் பள்ளியில் படிக்கும் போது பல போட்டிகளில் கலந்து கொண்டிருக்கிறேன். கர்நாடக இசை பிடிக்கும். அப்பா எனக்கு மிகவும் ஆதரவு கொடுத்தார். பயிற்சியும் கொடுத்தார். எப்படியாவது முதல் பரிசு வாங்கிவிட வேண்டும் என்று முயற்சி செய்தேன், கிடைத்துவிட்டது. எல்லாருக்கும் நன்றி.'' இப்படி கூறும் உமாவுக்கு விரிவுரையாளராக ஆசையாம்.

இராமதாஸ் (உயர்நிலை மேல்நிலை பிரிவு), ''சிறுவயதிலிருந்தே சொந்தமாகப் பாடுவேன். பல பள்ளிப் போட்டி களில் கலந்து



கொண்டிருக்கிறேன். பாட்டை கேட்டு அதே மெட்டில் பாடுவேன். இந்த போட்டியில் கலந்து கொள்வதற்கு முன்பு இரண்டு வாரம் பயிற்சி செய்தேன். சங்கீதத்தை முறைப்படி கற்று வருகிறேன்.'' இவ்வாறு கூறும் இராமதாஸ் வருங்காலத்தில் காவலராக வர விரும்புகிறார்.



பிரியதர்ஷிணி (உயர்கல்விப் பிரிவு). ''நான் மூன்று ஆண்டுகளாக இசையை முறைப்படி கற்று வருகிறேன். இதற்கு முன் பள்ளிப் போட்டிகளில் கலந்து கொண்டிருக்கிறேன். இதற்கு முன் நான்குமுறை முதல் பரிசு கிடைத்திருக்கிறது. இரண்டு முறை 2வது பரிசு, இருந்தாலும் கடுமையாகப் பயிற்சி செய்தேன். முயற்சி செய்தேன். பாட்டைக் கேட்டு அதே மாதிரி பாடுவேன்.

என் பெற்றோரும் ஊக்கமும் பயிற்சியும் கொடுத்தார்கள். எப்படியும் நான் வெற்றி பெறுவேன் என்னும் நம்பிக்கை எனக்கிருந்தது.'' இவ்வாறு கூறும் பிரியதர்ஷிணி *Electronic Engineering* படிக்க வேண்டும், பாடகியாக வேண்டும் என்று விரும்புகிறார்.

இந்த வெற்றியாளர்கள் மேலும் பல வெற்றிகள் பெற்று சாதனையாளராக புண்ணியாவின் வாழ்த்துகள்.

●

